மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# திருவாய்மொழி நூற்றந்தாதி

ஒருநாயகமாய் உலகுக்கு வானோர்*
இருநாட்டிலேறியுய்க்கு மின்பம்—திரமாகா*
மன்னுயிர்ப்போகம்தீது மாலடிமையேயினிதாம்*
பன்னியிவை மாறனுரைப்பால். 31

பாலரைப்போல்சீழ்கிப் பரனளவில்வேட்கையால்*
காலத்தால்தேசத்தால் கைகழிந்து*—சால
அரிதானபோகத்தில் ஆசையுற்றுநைந்தான்*
குருகூரில்வந்துதித்த கோ. 32

கோவானவீசன் குறையெல்லாம்தீரவே*
ஓவாதகாலத்துவாதிதனை*—மேவிக்
கழித்தடையக்காட்டிக் கலந்தகுணமாறன்*
வழுத்துதலால் வாழ்ந்ததிந்தமண். 33

மண்ணுலகில்முன்கலந்து மால்பிரிகையால் *மாறன்
பெண்ணிலைமையாய்க் காதல்பித்தேறி*—எண்ணிடில்முன்
போலிமுதலானபொருளை அவனாய்நினைந்து*
மேல்விழுந்தான் மையல்தனின்வீறு. 34

வீற்றிருக்குமால்விண்ணில் மிக்கமயல்தன்னை*
ஆற்றுதற்காத்தன்பெருமையானதெல்லாம் *தோற்றவந்து
நன்றாகலக்கப்போற்றி நன்குகந்துவீறுரைத்தான்*
சென்றதுயர் மாறன் தீர்ந்து. 35

தீர்ப்பாரிலாதமயல் தீரக்கலந்தமால்*
ஓர்ப்பாதுமின்றி யுடன்பிரிய*—நேர்க்க
அறிவழிந்து உற்றாரு மறக்கலங்க * பேர்கேட்டு
அறிவுபெற்றான்மாறன்சீலம் 36

சீலமிகுகண்ணன் திருநாமந்தானுணர்ந்து*
மேலவன்றன்மேனிகண்டு மேவுதற்கு *—சால
வருந்தியிரவும்பகலும் மாறாமல்கூப்பிட்
டிருந்தனனே *தென்குருகூரேறு. 37

ஏறுதிருவுடைய ஈசனுகப்புக்கு*
வேறுபடிலென்னுடைமை மிக்கவுயிர்*—தேறுங்கால்
என்றனக்கும்வேண்டா எனுமாறன் தாளைநெஞ்சே*
நந்தமக்குப்பேறாக நண்ணு 38

நண்ணாதுமாலடியை நானிலத்தே வல்வினையால்*
எண்ணாத்துன்பமுறு மிவ்வுயிர்கள்*—தண்ணிமையைக்
கண்டிருக்கமாட்டாமல் கண்கலங்குமாறனருள்*
உண்டுநமக்குற்றதுணையொன்று. 39

**ஒன்றுமிலைத்தேவு இவ்வுலகம்படைத்தமால்*
அன்றியென ஆருமறியவே*—நன்றாக
மூதலித்துப்பேசியருள் மொய்ம்மகிழோன் தாள்தொழவே*
காதலிக்குமென்னுடையகை. 40

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.